[4th September 1958

## *Yarn*

* 46 *Q.*—SRI P. S. SANTHANAM: கனம் முதலமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) 1956–57, 1957–58-ம் ஆண்டுகளில் திருவண்ணுமலை பிளாக் டெவலப்மெண்ட் திட்டத்தின்கீழ் நூல் நூற்பதற்காக எவ்வளவு பஞ்சு வாங்கப்பட்டது ?

(ஆ) அதில் எவ்வளவு மதிப்புள்ள நூல் நூற்கப்பட்டது ?

(இ) (1) துரிஞ்சிபுரம் பிர்க்காவில், (2) கீழ்ப் பெண்ணுத்தூர் பிர்க்காவில் எவ்வளவு மதிப்புள்ள நூல் நூற்கப்பட்டது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Silvers purchased from spinners—

| | Quantity. | Value. |
|---|---|---|
| | LB. | RS. NP. |
| 1956-57 .. .. | 1,271 | 2,224·23 |
| 1957-58 .. | 1,135 | 2,021·25 |

(*b*) Rs. 9,704.

(*c*) Thurinjipuram firka—Rs. 3,194·25
Kilpennathur firka—Rs. 4,129·75

SRI P. S. SANTHANAM : தலைவர் அவர்களே, இந்த இரண்டு பிர்க்காவிற்காக வாங்கப்பட்ட பஞ்சு எந்த இடத்திலிருந்து வாங்கப்பட்டது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : பருத்தி எந்த இடத்திலிருந்து வாங்கப்பட்டது என்ற தகவல் எங்களிடம் இல்லை. அநேகமாக திருப்பூர் பகுதியிலிருந்து வாங்கப்பட்டு வருகிறது.

SRI P. S. SANTHANAM : விற்கப்பட்ட பருத்தியை அவர்களே கைத்தறி ஆடையாகச் செய்கிறார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : பருத்திக்கு எவ்வளவு விலை ஆகிறதோ அந்த விலைக்கு, அதாவது "காஸ்ட் பிரைஸுக்கு" கொடுக்கப்படுகிறது. அவர்கள் அதை நூலாக நூற்றதும், நூலுக்கு விலை கொடுத்து வாங்கப்படுகிறது. பிறகு, அது கைத்தறித் துணியாக உற்பத்தி செய்யப்படுகிறது.

## *Caste*

* 47 *Q.*—SRI N. K. PALANISAMY AND P. G. MANICKAM : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether an all-party conference has been held to discuss measures to be adopted to eradicate the caste differences; and

(*b*) if so, the details thereof?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

4th September 1958]

(Sri N. K. Palanisami was standing in his place while the Hon. Minister was answering the question.)

MR. SPEAKER : The hon. Member need not stand while the Hon. Minister is answering the question. I will call him after the Hon. Minister finishes his answer and then I will call the hon. Member Manickam.

SRI N. K. PALANISAMI : கனம் மந்திரி அவர்கள் சில மாதங்களுக்கு முன்பு இந்தச் சபையில் பேசும்போது, எல்லாக் கட்சிகளையும் கொண்ட ஒரு மகாநாட்டைக் கூட்டி, ஜாதியை ஒழிப்பதற்கு நடவடிக்கை எடுக்கப்போவ தாகச் சொன்னார்கள். அம்மாதிரி ஏன் நடவடிக்கை எடுக்க வில்லை ? அவ்வாறு நடவடிக்கை எடுப்பதாக உத்தேசம் இருக்கிறதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : மற்ற கட்சித் தலைவர்கள் இதைப் பற்றி என்ன நினைக்கிறார்கள் என்று தெரிந்த பின்புதான் நடவடிக்கை எடுக்கவேண்டியிருக்கிறது. எல்லாக் கட்சித் தலைவர்களையும் கொண்ட மகாநாடு நடந்துவிட்டதா என்று போடப்பட்ட கேள்விக்கு அம்மாதிரி மகாநாடு நடக்கவில்லை என்று பதிலளித்தேன்.

SRI M. KALYANASUNDARAM : அமைச்சர் அவர்கள் இதைப் பற்றி இந்தச் சட்டசபையில் தெரிவித்து பல மாதங்கள் ஆகின்றன. கட்சித் தலைவர்களின் அபிப்பிராயத்தைத் தெரிந்துகொள்வதற்கு என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : சர்க்காரே இதிலுள்ள பல்வேறு பிரச்னைகளை எவ்வாறு தீர்ப்பது என்பது பற்றி பரிசீலனை செய்து, சில தற்காலிக முடிவுகளுக்கு வந்தபிற்பாடு மகாநாடு கூட்டி ஆலோசனை செய்தால் நன்றாக இருக்கும் என்று சர்க்கார் நினைத்தது. இப்பொழுது இவ்விஷயம் பரிசீலனையில் இருக்கிறது. தற்காலிக முடிவுகள் கூட இல்லாமல், கட்சித் தலைவர்கள் மகாநாட்டைக் கூட்டினால், ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமான யோசனையைச் சொல்லக்கூடும். எந்தவிதமான முடிவுக்கும் வர முடியாமல் போகும்.

SRI K. ANBAZHAGAN : ஜாதிகள் இருப்பதைப் பற்றி இப்பொழுது கவலைப்படத் தேவையில்லை. இருக்கிற ஜாதிகளுக்கிடையில் தகராறு இல்லாமல் இருந்தால் போதும் என்ற கருத்தை இந்த மகாண முதலமைச்சர் தெரிவித்திருக்கிற நேரத்தில், ஜாதி ஒழிப்பிலே அரசாங்கத் துக்கு அக்கறை இருக்கிறது என்று எவ்வாறு கொள்ளமுடியும் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : ஜாதிகள் ஒழிகிறவரைக்கும் ஒவ்வொருவரும் சண்டை போட்டுக் கொள்ளவேண்டாமென்று அவர்கள் சொன்னார்கள். அது நல்ல புத்திமதிதான். (சிரிப்பு.)

THE HON. SRI K. KAMARAJ : வேண்டுமென்றால் சண்டை போட்டுக் கொள்ளுங்களேன். (சிரிப்பு.)

SRI A. GOVINDASAMY : ஜாதி ஒழிப்பு விஷயத்தில் அரசாங்கம் ஒரு முடிவுக்கு வந்தபிறகு, மற்ற கட்சித் தலைவர்களைக் கலந்து ஆலோசனை செய்வதாக கனம் மந்திரி அவர்கள் சொன்னார்கள். முடிவுக்கு வந்தபிறகு மகாநாடு கூட்டுவதற்கு என்ன அவசியம் ? முடிவுக்கு வருவதற்கு முன்னால் அவர்களுடைய கருத்தைத் தெரிந்துகொள்வதற்கு முயற்சி எடுப்பார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : தற்காலிகமாக பிரச்னைகளைப் பரிசீலனை செய்து, அவற்றை எவ்வாறு தீர்க்க முடியும் என்பதைப்பற்றி ஆலோசனை செய்த பிறகு, உருவான கருத்துக்களை கட்சித் தலைவர்கள் முன்னால் வைத்து, அவர்களுடைய ஆலோசனையைக் கேட்டால் சரியாக இருக்குமே தவிர, அதில்லாமல் எல்லா கட்சித் தலைவர்களையும் கூப்பிட்டுக்

கேட்டால், ஒவ்வொருவரும் ஒவ்வொருவித அபிப்பிராயத்தைச் சொல்லக் கூடும். அதனால் குழப்பம் தான் ஏற்படும். எவ்வாறு கல்விப் பிரச்னை, ஸ்தல-ஸ்தாபனங்கள் பிரச்னை, மொழிப் பிரச்னை இவைகளைப் பற்றி திட்ட வட்டமான, உருப்படியான யோசனைகளைச் சொல்லி அதன் பிறகு ஒரு மகாநாட்டைக் கூட்டி முடிவுகள் எடுத்தோமோ அப்படி இதிலும் செய்தால் ஒரு முடிவுக்கு வரமுடியுமே தவிர, ஒரு கூட்டத்தைக் கூட்டி கட்சித் தலைவர் களின் ஆலோசனைகளைச் சொல்லச் சொன்னால், மாறுபட்ட கருத்துக்கள் தான் வெளியாகுமே தவிர, ஜாதியை ஒழிப்பதற்குத் திட்டவட்டமான ஒரு வழியை வகுக்க முடியாது என்பது தான் என்னுடைய கருத்து.

* 48 Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state whether the Government have any information about the proposal of the Centre to avoid caste names while taking enumeration lists in connection with the census to be taken in 1961?

THE HON. SRI C. SUBRAMANIAM : I have no information. Sir.

SRI N. K. PALANISAMI : வோட்டர் ஜாபிதாக்களில் பதிவு செய்கின்ற பெயர்களுக்கு நேராக ஜாதிப் பெயரைப் போடாமல் இருப்ப தற்கு நமது சர்க்கார் மத்திய சர்க்காருக்குச் சிபார்சு செய்வார்களா? ஜாதி ஒழிப்பிற்கு இது முதல் நடவடிக்கையாக இருக்காதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : பெயருக்குப் பின்னால் ஜாதிப் பெயரைப் போடாமலிருந்தால் ஜாதி ஒழிப்பு ஏற்பட்டுவிடும் என்று சொன்னால், அது மிகவும் சுலபம். மனதிலே இருக்கக் கூடிய எண்ணங் களை ஒழிப்பதுதான் முக்கியம். எந்த விதத்தில் இந்த ஜாதி வேறுபாடு களை ஒழிப்பது என்பதுதான் பிரச்னை. ஆனால் ஜன சங்கியைப் பொறுத்த புள்ளி விவரங்களுக்குச் சில விவரங்கள் அவசியமாக இருக்கின்றன. எவ் வளவு தூரம் இந்தப் பெயர்களைத் தவிர்க்க முடியும் என்பதைப் பற்றி ஆலோசனை செய்துதான் முடிவு செய்யவேண்டும்.

SRI K. SATTANATHA KARAYALAR : மத்திய சர்க்கார் வேண்டுதலின் பேரில் பின் தங்கிய வகுப்பினருக்கு அளிக்கப்படும் சலுகை களை ரத்து செய்துவிட்டு, திறமையை அடிப்படையாகக்கொண்டு சலுகை கள் கொடுக்க வேண்டுமென்று இந்தச் சர்க்கார் சிபார்சு செய்திருக்கிறதா ?

THE HON SRI C. SUBRAMANIAM : இந்தப் பிரச்னையும் இப்பொழுது பரிசீலனையில் இருக்கிறது. அதுவும் கூட ஆலோசனைக்கு வரும்.

SRI S. NAGARAJA MONIGAR : ஜாதிகளை ஒழிக்கும் விஷயத்தில் சர்க்காரே தலையிட்டு நடவடிக்கை எடுக்குமா அல்லது அரசியல் ரீதியில் சமூகத் தலைவர்களைக் கலந்து அபிப்பிராயம் தெரிந்து கொள்வார்களா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : இதிலே உடனடியாக இன்ன முறையில்தான் செய்யப் போகிறோம் என்று திட்டவட்டமாகச் சொல்லும்படியான நிலையில் நான் இப்பொழுது இல்லை. படிப்படியாகத் தான் இம்மாதிரி விஷயங்களில் முன்னேற முடியும்.

## *Irrigation*

* 49 Q.—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether any lift irrigation schemes have been sanctioned for the South Arcot district; and

(*b*) if so, the details thereof?